# ربِّ غفّار کا گنہ گاروں سے پیار (ٹمل)

# பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்

كَفٰى بِي عِزًّا اَنْ تَكُوْنَ لِي رَبًّا
وَكَفٰى بِي فَخْرًا اَنْ اَكُوْنَ لَكَ عَبْدًا
اَنْتَ لِي كَمَا اُحِبُّ
فَوَفِّقْنِي اِلٰى مَا تُحِبُّ

حضرت مولانا پیر ذوالفقار احمد نقشبندی مجددی
دامت برکاتہم

ஹஜ்ரத் மௌலானா பீர்
**துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப்**
நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹும்



رب غفّار کا گنہ گاروں سے پیار (ٹمل)

# பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்


حضرت مولانا پیر ذوالفقار احمد نقشبندی مجددی
دامت برکاتہم

ஹஸ்ரத் மௌலானா பீர்

**துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப்**

நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹும்



வெளியீடு :

**மௌலானா ஷகீல் அஹ்மது நக்ஷ்பந்தி**

செல் : 94444 53232

# பொருளடக்கம்





بِسۡمِ اللّٰهِ الرَّحۡمٰنِ الرَّحِيۡمِ

اَلْحَمْدُ لِلّٰهِ وَكَفٰى وَسَلَامٌ عَلٰى عِبَادِهِ الَّذِيْنَ اصْطَفٰى --- اَمَّا بَعْدُ!

## பாவம் என்பது என்ன?

அல்லாஹ்வின் கட்டளையை மீறுவதையும், நபி ﷺ அவர்களின் சுன்னத்தான வழிமுறைகளுக்கு மாற்றமாக செயல்படுவதையும் பாவம் என்று கூறப்படும்.

இறைக்கட்டளையை மீறி, நபியவர்களின் உன்னதமான நெறிமுறைகளை விட்டு மாறி,தீமையின் பக்கம் செல்வது பாவமாகும்.

وَذَرُوْا ظَاهِرَ الْاِثْمِ وَبَاطِنَهٗ

வெளிப்படையான பாவத்தையும், அந்தரங்கமான பாவத்தையும் விட்டுவிடுங்கள்! (அல் குர்ஆன் 6:120)

பகிரங்கமான பாவங்களையும், ரகசியமான பாவங்களையும் விட்டுவிடும்படி அல்லாஹ் நமக்கு கட்டளையிடுகிறான்.

**பாவங்களை போக்க ஒரே வழி**

பாவங்களை போக்க ஒரே வழி, அப்பாவங்களை அடியோடு விட்டுவிடுவதாகும். பாவங்கள் புற்றுநோயைப் போன்றது. உடலின் ஏதேனும் ஒரு உறுப்பில் புற்றுநோய் தொற்றிக் கொண்டால், அதற்கு ஒரே மருந்து, அவ்வுறுப்பை வெட்டி எடுத்துவிடுவதாகும். வெட்டி எடுக்காவிட்டால், நோய் உடல் முழுக்க பரவி மனிதன் மரணிக்க காரணமாகிவிடுவதைப்போல் மனிதன் பாவங்களை விடாமல் தொடர்ந்து செய்து கொண்டே இருந்தால் அப்பாவங்களின் பழக்கம் மேலோங்கி அவனது ஆன்மா மரணமடைய அது காரணமாகிவிடுகிறது.

**மெல்லிய நூல் நங்கூரமாக....!**

ஒரு பாவத்தை முதல்முதலாக செய்யும் போது மெல்லிய நூலைப் போன்று பலவீனமாக இருக்கும். மெல்லிய நூலை சிறு குழந்தை கூட அறுத்துவிடும். இதே போன்று ஆரம்பத்திலேயே பாவத்தை விட்டுவிடுவது மிக சுலபமாகும். விடாமல் செய்து கொண்டே இருந்தால் அப்பாவம் நங்கூரத்தைப் போன்று ஆகிவிடும். நங்கூரம் கப்பலை நகரவிடாமல் பிடித்துக் கொள்வதைப் போல் தொடராக

செய்யும் பாவங்கள், மனிதனை பற்றிப்பிடித்துக் கொள்கிறது. பின்பு இவன் விட்டுவிட நினைத்தாலும் விட முடியாது. எனவே பாவங்களை உடனடியாக விட்டுவிட வேண்டும்.

**பாவம் சிறுத்தாலும் அல்லாஹ்வின் மகத்துவம் பெரிதல்லவா!**

ஹாஃபிழ் இப்னு கைய்யும் (ரஹ்) அவர்கள் ஒரு ஆச்சரியமான விஷயத்தை குறிப்பிடுகிறார்கள். அதாவது நண்பனே! பாவம் சிறியதா? பெரியதா? என்பதை பார்த்துக் கொண்டிருக்காதே! மாறாக பாவம் புரிவதின் மூலம் நீ யாருக்கு மாறுசெய்கிறாயோ அந்த இறைவனின் மகத்துவம் எவ்வளவு பெரியது! அவனுக்கு மாறுசெய்யலாமா? என்பதை சிந்தித்துப் பார்! என்று கூறுகிறார்கள்.

**சிறு பிள்ளையின் அச்சம் இங்கே,**

**அல்லாஹ்வின் அச்சம் எங்கே?**

இன்று பாவச் செயல்களில் ஈடுபடும் போது சிறு பிள்ளையை கண்டாலும் பயந்து சுதாரித்துக் கொள்கின்ற அதே நேரத்தில் அல்லாஹ்வின் நினைவால் மனிதர்கள் சுதாரித்துக் கொள்வதில்லை என்பது பெரும் வருத்தத்திற்குரிய விஷயமாகும்.

**ஒரு பெரியாரின் இறை உதிப்பு**

மக்கள் பாவமான செயல்களில் ஈடுபடும் போது உலகத்தார்கள் பார்க்கின்ற கதவுகளை மூடிவிடுகிறார்கள். ஆனால் நான் (இறைவன்) பார்க்கின்ற கதவை மூடுவதில்லை. பார்க்கக்கூடியவர்களில் என்னை மிக பலகீனமானவன் என்று கருதிக்கொண்டார்களா?

எனவே பகிரங்கமாக அல்லது ரகசியமாக செய்கின்ற அனைத்து பாவங்களையும் அடியோடு விட்டுவிடுங்கள்! அல்லாஹ் நம் பாவங்களின் மீது ரஹமத் எனும் திரையிட்டு மறைத்துவிட்டான். ஏனெனில் அவன் சத்தார் - பாவங்களை மறைப்பவன்.



பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்

**யாரும் உன்னை புகழ்வதில்லை**

நண்பா ! உன்னை புகழ்பவர்கள், உண்மையில் உன்னை புகழவில்லை. உன் பாவங்களனைத்தையும் மறைத்துவிட்ட அந்த அல்லாஹ்வை புகழ்கிறார்கள். பாவங்களினால் துர்நாற்றம் வீச ஆரம்பித்துவிட்டால். பார் போற்றும் பலரின் உடலிலிருந்து கூட தாங்க முடியாத அளவிற்கு துர்நாற்றம் வீசும்.

நூல்: இக்மாலுஷ் ஷியம்

அதா இப்னு ரபாஹ்(ரஹ்) அவர்கள், இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களின் ஆசிரியர்களில் ஒருவராகும். அல்லாஹ் இவர்களின் உள்ளத்தில் மிக ஆச்சரியமான ஒரு விஷயத்தை உதிக்கச் செய்ததைப் பற்றி விவரிக்கிறார்கள். அதாவது மக்களுக்கு உணவு, வசதிகளில் சிறிய குறைபாடு ஏற்பட்டாலும் உடனே மனிதர்கள் கூடியிருக்கும் சபைகளில் என்னைப் (இறைவனை) பற்றி முறையிட ஆரம்பித்து விடுகின்றனர். ஆனால் அவர்கள் செய்த செயல்களின் குறிப்பேடு பாவங்களால் நிரம்பிய நிலையில் எனக்கு முன்னால் வரும் போது நான் அவர்களைப் பற்றி மலக்குகளுக்கு முன்னிலையில் முறையிடுவதில்லை என்பதை மக்களுக்கு அறிவித்து விடுவீராக!

**பாவங்கள் ஏற்பட காரணங்கள்**

உலகில் நடைபெறுகின்ற பாவங்களுக்கும், குற்றங்களுக்கும் நான்கு விதமான காரணங்கள் உள்ளன. அவைகளை விட்டு தவிர்த்திருக்கும் வழிமுறைகளை அல்லாஹ் தன் திருமறையில் விளக்கிவிட்டான்.

**முதல் காரணம்**

என்னை யாரும் பார்க்கவில்லை என்ற எண்ணம். என்னை யாரும் பார்க்கவில்லை என்ற எண்ணம் மனிதனுக்கு வந்துவிடும் போது துணிச்சலாக பாவம் செய்கிறான்.

**அல்லாஹ் இதற்கு குர்ஆனில் விடையளிக்கிறான்:**

إِنَّ رَبَّكَ لَبِالْمِرْصَادِ

நிச்சயமாக உமதிரட்சகன் குறிவைத்து பார்த்துக் கொண்டிருக்கிறான்(அல் குர்ஆன் 89:14) مِرْصَادْ (மிர்சாத்)என்றால் வேடன்

வேட்டையாட குறிபார்க்கும் போது கண் சிமிட்டாமல் மூச்சையும் அடக்கிக் கொண்டு முழுமையாக அதன் பக்கம் கவனம் செலுத்தி பார்ப்பது. இதைத்தான் مِرْصَادُ (மிர்சாத்) எனப்படும். அல்லாஹ் இங்கு எச்சரிக்கை செய்கிறான். வேடன் குறிவைத்து ஓர்மையாக பார்ப்பதைப் போல் நான் ஒவ்வொருவரையும் உன்னிப்பாக பார்த்துக் கொண்டிருக்கிறேன். எனவே, நம்மையாரும் பார்க்கவில்லை என்றெண்ணி எவரும் பாவத்தில் ஈடுபட வேண்டாம்! அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான். You are under of the vision.

**இரண்டாம் காரணம்**

யாருக்கும் தெரியப்போவதில்லை என்ற எண்ணம். இதுவும் மனிதனை பாவத்தின் பக்கம் இழுத்து சென்றுவிடுகிறது, நான் தொலைபேசியில் பேசியது யாருக்கும் தெரியாது, நான் கடிதத்தில் எழுதியது யாருக்கும் தெரியாது, நான் விஷயத்தை தலைகீழாக புரட்டிவிட்டேன். எனவே, யாருக்கும் தெரிய வாய்ப்பில்லை. நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பது யாருக்கும் தெரியாது என்ற எண்ணங்கள் பாவங்களில் ஈடுபட காரணமாகிவிடுகின்றன. அல்லாஹுதஆலா தன் திருமறையில் நாம் செய்து கொண்டிருப்பது யாருக்கும் தெரியாது என்று எண்ண வேண்டாம்! ஏனெனில் يَعْلَمُ خَائِنَةَ الْأَعْيُنِ وَمَا تُخْفِي الصُّدُورُ "கண்களின் மோசடியையும். நெஞ்சங்கள் மறைத்து வைத்திருப்பதையும் அவன் நன்கறிவான்" (அல்குர்ஆன் 40:19) என்று அறிவுறுத்துகிறான்.

எனவே யாருக்கும் தெரியாது என்று எப்படி நினைக்க முடியும்? அல்லாஹ்விற்கு அனைத்தும் தெரியும். நாம் செய்வதை மட்டுமல்ல செய்ய நினைப்பதையும் அவன் நன்கறிகிறான்.

**மூன்றாம் காரணம்**

யாரும் என்னோடு இல்லை. நான் தனியாக இருக்கிறேன். இப்பொழுது என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம் என்ற எண்ணமும் பாவத்திற்கு காரணமாகிவிடுகிறது. இந்த எண்ணமும் தவறு என்பதை குர்ஆனில் அல்லாஹ் விவரித்து விட்டான்.

مَا يَكُونُ مِن نَّجْوَىٰ ثَلَاثَةٍ إِلَّا هُوَ رَابِعُهُمْ وَلَا خَمْسَةٍ إِلَّا هُوَ سَادِسُهُمْ
وَلَا أَدْنَىٰ مِن ذَٰلِكَ وَلَا أَكْثَرَ إِلَّا هُوَ مَعَهُمْ أَيْنَ مَا كَانُوا





மூவரின் ரகசியத்தில் அவன் அவர்களில் நான்காவதாக இல்லாமலில்லை; ஐவருடைய ரகசியத்தில் அவன் அவர்களில் ஆறாவதாக இல்லாமலில்லை (அல் குர்ஆன் 58:07) நீங்கள் எங்கிருந்த போதிலும், அவன் உங்களுடன் இருக்கிறான். (அல் குர்ஆன் 57:04)

எனவே, நான் தனியாக இருக்கிறேன். என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம் என்றெண்ணாதீர்கள்! எந்நேரமும் அல்லாஹ் உங்களுடன் இருக்கிறான்.

**நான்காம் காரணம்**

யாரும் என்னை எதுவும் செய்துவிட முடியாது என்ற எண்ணம். தந்தை இறந்து விட்டார். மகன் வாலிபமடைந்த பின்னர் தாயிக்கு பயப்படுவதில்லை. இப்பொழுது யாரும் என்னை எதுவும் சொல்ல முடியாது, யாரும் என்னை எதுவும் செய்துவிட முடியாது என்றெண்ணி தைரியமாக பாவங்களில் ஈடுபடுகிறான்.

யாரும் என்னை எதுவும் செய்துவிட முடியாது என்று நினைத்துக் கொள்ளாதே! உனக்கு மேல் அல்லாஹ் இருக்கிறான்.

إِنَّ أَخْذَهُ أَلِيمٌ شَدِيدٌ

நிச்சயமாக அவனுடைய பிடி, வேதனைமிக்கதாகும். கடுமையானதாகும் (அல் குர் ஆன் 11:102) என்று அல்லாஹ் எச்சரிக்கின்றான். فَصَبَّ عَلَيْهِمْ رَبُّكَ سَوْطَ عَذَابٍ எனவே, உம்முடைய இரட்சகன் அவர்கள் மேல் வேதனையின் சாட்டையை எறிந்தான். (அல் குர் ஆன் 89:13)

لَا يُعَذِّبُ عَذَابَهُ أَحَدٌ ۝ وَلَا يُوثِقُ وَثَاقَهُ أَحَدٌ ۝

மேலும், அந்நாளில் அவன் வேதனை செய்வதைப் போல் வேறு எவனும் வேதனை செய்ய மாட்டான். அவன் கட்டுவது போல் வேறு எவனும் கட்டமாட்டான் (அல் குர்ஆன் 89:25,26)

فَإِنِّي أُعَذِّبُهُ عَذَابًا لَّا أُعَذِّبُهُ أَحَدًا مِّنَ الْعَالَمِينَ நிச்சயமாக நான், அகிலத்தாரில் எவரையுமேநான் வேதனை செய்திராத கொடியதொருவேதனையைக் கொண்டு அவரை நான் வேதனை செய்வேன். (அல் குர்ஆன் 5:115) என்று அல்லாஹ் எச்சரிப்பதை பார்த்தீர்களா? எனவே யாரும் என்னை எதுவும் செய்துவிட முடியாது என்ற நினைப்பில் எவரும் இருந்துவிட வேண்டாம். நமக்கு மேல்

அல்லாஹ் இருக்கிறான். அவன் அனைத்தையும் செய்ய சக்திபடைத்தவன்.

**பாவங்களுக்கான நான்கு சாட்சிகள்**

கியாமத் நாளில் ஒவ்வொரு மனிதனுடனும் நான்கு சாட்சிகள் இருக்கும்.

**முதல் சாட்சி:** மனிதனின் செயல்பாடுகளின் பதிவேடு,

وَوُضِعَ الْكِتٰبُ فَتَرَى الْمُجْرِمِيْنَ مُشْفِقِيْنَ مِمَّا فِيْهِ
وَيَقُوْلُوْنَ يٰوَيْلَتَنَا مَالِ هٰذَا الْكِتٰبِ لَا يُغَادِرُ صَغِيْرَةً
وَّلَا كَبِيْرَةً اِلَّاۤ اَحْصٰىهَا وَوَجَدُوْا مَا عَمِلُوْا حَاضِرًا
وَلَا يَظْلِمُ رَبُّكَ اَحَدًا ○ பதிவேடு

(அவர்கள் முன்) வைக்கப்படும்; அதிலிருப்பதைக் கண்டு குற்றவாளிகள் மிக்க அச்சத்துடன் இருப்பதை நீர் காண்பீர். மேலும் அவர்கள், எங்கள் கேடே! இந்த ஏட்டிற்கு என்ன நேர்ந்தது? (எங்களுடைய பாவங்கள்) சிறிதோ பெரிதோ எதையும் வரையறுக்காது இது விட்டுவைக்க வில்லையே ! என்று கூறுவார்கள். இன்னும் அவர்கள் செய்தவற்றை முன் வைக்கப்பட்டதாக காண்பார்கள்; இன்னும், உமதிரட்சகன் எவருக்கும் அநியாயம் செய்யமாட்டான். (அல் குர்ஆன் 18:49)

**இரண்டாம் சாட்சி:** மலக்குமார்களாகும்.

وَاِنَّ عَلَيْكُمْ لَحٰفِظِيْنَ ○ كِرَامًا كَاتِبِيْنَ ○ يَعْلَمُوْنَ مَا تَفْعَلُوْنَ ○

மேலும், நிச்சயமாக உங்கள் மீது பாதுகாவலர்கள் (நியமிக்கப்பட்டு) இருக்கின்றனர். (அவர்கள்) கண்ணியமான எழுத்தாளர்கள், நீங்கள் செய்பவற்றை அவர்கள் அறிந்து கொள்வார்கள் (அல் குர்ஆன் 82:10,11,12)

**மூன்றாம் சாட்சி:** உடல் உறுப்புகள்.

اَلْيَوْمَ نَخْتِمُ عَلٰۤى اَفْوَاهِهِمْ وَتُكَلِّمُنَاۤ اَيْدِيْهِمْ
وَتَشْهَدُ اَرْجُلُهُمْ بِمَا كَانُوْا يَكْسِبُوْنَ





இன்றைய தினம் நாம் அவர்களின் வாய்களின் மீது முத்திரையிட்டுவிடுவோம். மேலும், அவர்கள் சம்பாதித்துக் கொண்டிருந்தவைகளைப் பற்றி அவர்களுடைய கைகள் நம்மிடம் பேசும்; அவர்களுடைய கால்களும் சாட்சி சொல்லும். (அல் குர்ஆன் 36:65)

இவ்வுலகில் திரித்து வளைத்து தில்லுமுல்லு செய்து கொண்டிருந்த நாவிற்கு மறுமையில் அல்லாஹ், சீல் வைத்துவிடுவான். எந்த தில்லுமுல்லும் செய்ய முடியாது.

يَوْمَ تُبْلَى السَّرَآئِرُ அந்நாளில் மர்மங்களனைத்தும் வெளிப்பட்டுவிடும். (அல் குர்ஆன் 86:09) அல்லாஹு அக்பர். இந்த உம்மத்தின் இறைநேசர்கள் இந்த ஆயத்தை ஓதி ஓதி யா அல்லாஹ் ! அந்த கியாமத் நாளில் ரகசியங்கள் அனைத்தும் வெளிப்பட்டுவிடும் என்று நீ கூறுகிறாய் எங்கள் இரட்சகா ! அந்நாளில் எங்கள் நிலை என்னவாகும்? என்று அழுது கொண்டிருந்தார்கள்.

மனித உறுப்புகள், அவனுக்கு பாதகமாக சாட்சி கூறும் போது

لِمَ شَهِدْتُّمْ عَلَيْنَا

எங்களுக்கு எதிராக நீங்கள் ஏன் சாட்சி கூறினீர்கள்? என்று உறுப்புகளோடு தர்க்கம் செய்வான். அப்பொழுது அந்த உறுப்புகள்

قَالُوْۤا اَنْطَقَنَا اللّٰهُ الَّذِيْۤ اَنْطَقَ كُلَّ شَيْءٍ

எல்லாப் பொருட்களையும் பேசச்செய்த அல்லாஹ்தான் எங்களையும் பேசச்செய்தான் என்று கூறும். அடுத்து அல்லாஹ் கூறுகிறான்: وَمَا كُنْتُمْ تَسْتَتِرُوْنَ اَنْ يَّشْهَدَ عَلَيْكُمْ سَمْعُكُمْ
وَلَاۤ اَبْصَارُكُمْ وَلَا جُلُوْدُكُمْ

உங்கள் காதுகளும், உங்கள் கண்களும், உங்கள் தோல்களும் உங்களுக்கெதிராக சாட்சி சொல்வதை விட்டும் மறைத்துக் கொண்டவர்களாக நீங்கள் இருக்க முடியவில்லை (அல் குர்ஆன் 41:21,22)

எந்த உறுப்புகளினால் பாவங்கள் செய்கின்றோமோ அந்த உறுப்புகளுக்கு தெரியாமல் எப்படி அந்த பாவத்தை செய்துவிட முடியும்? அந்த உறுப்புகள் எப்படி சாட்சி கூறாமல் இருக்கும்? என்பதை சிந்திக்க தூண்டுகிறான்.

**நான்காம் சாட்சி:** பூமி.

இதுவும் கியாமத் நாளில் சாட்சி கூறும். புகைப்படக் கருவி (camera) போட்டோ பிடித்து காட்சிகளை சேகரித்து வைத்துக் கொள்வதைப் போல் அல்லாஹ்வின் படைப்பான பூமியும் தன் மேல் நடப்பவற்றை படம் பிடித்து வைத்துக்கொள்கிறது. நன்மைசெய்பவர்களின் நன்மை, தீமை செய்பவர்களின் தீமை இரண்டையும் படம் பிடித்து வைத்துக்கொள்கிறது. கியாமத் நாளில் உன் முதுகின் மீது நடைபெற்றவைகளை கூறு! என்று அல்லாஹ கட்டளையிடுவான்.

يَوْمَئِذٍ تُحَدِّثُ أَخْبَارَهَا ۝ بِأَنَّ رَبَّكَ أَوْحَىٰ لَهَا ۝

அந்நாளில் அது. தனது செய்திகளை அறிவிக்கும். நிச்சயமாக உமதிரட்சகன் (அறிவிக்குமாறு)அதற்கு வஹிமூலம் அறிவித்ததன் காரணமாக! (அல்குர்ஆன் - 99:04.05)

யாரும் எதையும் மறைக்க முடியாது. எனவே அடியோடு அனைத்து பாவங்களையும் உடனடியாக விட்டுவிட்டு தவ்பா செய்து, இனிவரும் காலங்களில் நல்ல மனிதராக வாழ வேண்டும்!

**பாவத்தில் ஆர்வமும். தண்டனையின் அச்சமும்**

ஒரு வாலிபர், இப்ராஹூம் இப்னு அத்ஹம் (ரஹ்) அவர்களிடம் வந்து, ஹள்ரத்! நான் பாவங்கள் புரிந்து கொண்டே இருக்கிறேன். தண்டனையின் பயமும் இருக்கிறது. ஆனாலும் பாவத்தை விடமுடியவில்லை. எனவே, பாவங்களை நான் செய்தாலும் தண்டனை மட்டும் கிடைக்காமலிருக்க ஏதேனும் நல்ல யோசனை கூறுங்கள் ! என்று கேட்டார். இறைநேசர்கள் தூர நோக்கு சிந்தனையுடையவர்களாக இருந்தார்கள் எடுத்தெறிந்து பேசமாட்டார்கள். அன்புடன் விஷயத்தை விளக்குவார்கள். ஹள்ரத் அவர்களும், சரி நான் ஒரு யோசனை கூறுகிறேன் என்று கூறினார்கள். அவர் மிக சந்தோஷமடைந்து விஷயத்தை கேட்க தயாராகிவிட்டார்.

ஹள்ரத் அவர்கள் கூறிய **முதல் யோசனை:** பாவம் செய்தே தீருவேன் என்றால், அல்லாஹ்வின் பார்வையை விட்டு மறைந்து செய்யுங்கள்! என்று கூறினார்கள்.





அவர் சிந்தித்துவிட்டு, ஹள்ரத் ! அல்லாஹ்வின் பார்வையை விட்டு மறைந்து எப்படி பாவம் செய்யமுடியும்? இது சாத்தியமேஇல்லையே! என்று கூறினார்.

**இரண்டாம் யோசனை:**

அப்படியானால், அல்லாஹ் வழங்கும் உணவை உண்பதை விட்டுவிட்டு, அல்லாஹ்விடம் யா அல்லாஹ்! உன்னுடைய உணவையும் நான் உண்ணவில்லை. உன் பேச்சையும் நான் கேட்கவில்லை என்று கூறிவிடுங்கள் ! என்று ஹள்ரத் அவர்கள் கூறினார்கள்.

உணவு உண்ணுவதை விட்டுவிட்டு என்னால் எப்படி உயிர் வாழமுடியும்? என்று அவர் கூறினார்.

**மூன்றாம் யோசனை:**

பின்னர் ஹள்ரத் அவர்கள் மூன்றாவதாக ஒரு யோசனை கூறினார்கள் : வானமும் பூமியும் அல்லாஹ்வின் ஆட்சியின் கீழ் இருக்கின்றன. அவனது ஆட்சியின் கீழ் இருந்து கொண்டு அவனுக்கே மாறுசெய்வது சரியானதல்ல. எனவே இவைகளை விட்டு வெளியேறி பாவங்களை செய்யுங்கள்! என்று கூறினார்கள். அல்லாஹ் தன் திருமறையில்

يَٰمَعْشَرَ ٱلْجِنِّ وَٱلْإِنسِ إِنِ ٱسْتَطَعْتُمْ أَن تَنفُذُوا۟
مِنْ أَقْطَارِ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضِ فَٱنفُذُوا۟

ஜின். மனு கூட்டத்தார்களே ! நீங்கள் வானங்கள். பூமியின் எல்லைகளை விட்டும் கடந்து செல்ல சக்தி பெற்றால் கடந்து சென்று விடுங்கள்! (அல் குர்ஆன் 55:33) என்று சவால் விடுகிறான். இதை கேட்ட அவர் ஹள்ரத்! இதுவும் நடக்காத காரியம் என்று கூறிவிட்டார்.

**நான்காம் யோசனை:**

சரி, மற்றொரு யோசனை கூறுகிறேன்: ரூஹை வாங்க மலகுல் மௌத் வரும் போது அவர்களிடம் இப்பொழுது இல்லை, சிறிது தாமதமாக வாருங்கள்! என்று கூறிவிடுங்கள்! என்று கூறினார்கள். உடனே அவர், ஹள்ரத்! ரூஹ் வாங்குவதில் தாமதமா? கற்பனைக்கும் எட்டாதே! என்று கூறினார்.

إِذَا جَآءَ أَجَلُهُمْ فَلَا يَسْتَأْخِرُونَ سَاعَةً وَلَا يَسْتَقْدِمُونَ

அவர்களுடைய தவணை வந்துவிட்டால் சற்று நேரம் பிந்தவும் மாட்டார்கள்; முந்தவும் மாட்டார்கள். (அல் குர்ஆன் 10:49)

**ஐந்தாம் யோசனை:**

அப்படியானால், கபரில் உங்களை அடக்கம் செய்த பின் கேள்வி கேட்பதற்காக முன்கர், நகீர் என்ற இரு மலக்குகள் வரும் போது (No admission without permission) அனுமதியின்றி வரக்கூடாது என்று மக்கள் எழுதி தொங்கவிடுவதைப் போல் அனுமதியின்றி ஏன் வந்தீர்கள்! என்று கேட்டு திருப்பி அனுப்பிவிடுங்கள்! என்று கூறினார்கள். ஹள்ரத்! நான் அவர்களை எப்படி தடுத்து நிறுத்த முடியும்? என்று கூறினார்,

**ஆறாம் யோசனை:**

இறுதியாக ஒரு யோசனை, கியாமத் நாளில் உம்முடைய தீய செயல்களை வெளிப்படுத்தப்பட்டு மலக்குகளிடம் இவரை இழுத்துச் சென்று நரகத்தில் எறிந்துவிடுங்கள்! என்று அகிலத்தின் அதிபதி கூறும் போது, நீங்கள் முரண்டுபிடித்து நரகத்திற்கு செல்லாமல் நின்று கொள்ளுங்கள்! என்று கூறினார்கள்.

இதனை கேட்ட அவர், ஹள்ரத்! எந்த மதிப்புமற்ற எனக்கு மலக்குகளிடம் முரண்டுபிடிக்குமளவிற்கு தைரியம் கிடையாது. அந்நாளில் எனக்கு எந்த மதிப்பு, மரியாதையும் இருக்காதே! என்று கூறினார்.

இப்பொழுது எச்சரிக்கும் நேரம் வந்துவிட்டது, ஹள்ரத் அவர்களின் பேச்சும் சூடுபிடித்தது. என் தோழரே! எந்த மதிப்பும் மரியாதையுமற்ற நீங்கள் மாண்பும் மகத்துவமும் மிக்க இரட்சகனுக்கு ஏன் மாறு செய்கிறீர்கள்? என்று அறிவுரை பகர்ந்தார்கள், இவையனைத்தையும் கேட்ட அவர், ஹள்ரத்! நான் இன்றே அனைத்து பாவங்களை விட்டும் தவ்பா செய்கிறேன், இன்று முதல் என்னை படைத்த இறைவனுக்கு மாறு செய்ய மாட்டேன் என்று உறுதியளிக்கிறேன் என்று கூறினார்.





எனவே நாமும் பாவங்களை விட்டு விலகி, படைத்தவனின் சட்டதிட்டங்களுக்கு கட்டுப்பட்டு வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்!

**பாவத்தின் முடிவு நிம்மதியின்மை**

எல்லா பாவங்களுடன் நிம்மதியின்மையும், மனக்கலக்கமும் பின்னிப்பிணைந்துள்ளன. ஒருவர் பாவங்களில் ஈடுபடுகிறார். அதே நேரத்தில் மன நிம்மதியோடும் இருக்கிறார் என்பது சாத்தியமில்லாத விஷயமாகும். எவ்வளவு வெற்றிகரமாக பாவத்தை செய்து முடித்தாலும் சரி, அல்லது செல்வச்செழிப்பில் மிதப்பவராக இருந்தாலும் சரி, அவரது பாவம் அவருடைய மன நிம்மதியை கண்டிப்பாக குலைத்து விடும். கலக்கத்துடன் காணப்படுவார். இரவு நேரங்களில் தூக்கமின்றி தவிப்பார். இவரது பிரச்சனைகள் தீர்ந்தபாடிருக்காது. ஏதேனுமொரு பிரச்சனை வந்து கொண்டேயிருக்கும்.

பெரிய பெரிய ஹோட்டல்களில் நீங்கள் பார்த்திருப்பீர்கள். அங்கு பஃபே சிஸ்டம் என்று ஒவ்வொரு வகை உணவும் தனித்தனி ட்ரேக்களில் ஆங்காங்கே வைக்கப்பட்டிருக்கும் அவைகளின் அடியில் சிறிது நெருப்பு எறிந்து கொண்டே இருக்கும். அந்த நெருப்பு எந்த நேரமும் உணவை சூடாகவே வைத்திருக்கும். இதே போன்று பாவம் புரியும் அடியார்களின் வாழ்வில் பிரச்சனைகள் என்னும் நெருப்பை அல்லாஹ் பற்றவைத்துவிடுகிறான். அது அவர்களை எந்த நேரமும் நிம்மதியின்றி தவிக்க செய்கிறது, சதா கவலையில் இருப்பார்கள். அவர்கள் தவ்பா செய்து திருந்தாதவரை நிம்மதியின்றியே இருப்பபார்கள்.

சில சமயம் மனைவியிடமிருந்து பிரச்சனை,
சில சமயம் பிள்ளைகளிடமிருந்து பிரச்சனை,
சில சமயம் தொழில் துறையில் பிரச்சனை,
சில சமயம் உடல் சுகவீன பிரச்சனை,

ஒன்று முடிந்தவுடன் மற்றொன்று வரும், அது முடிவதற்குள் மூன்றாவதாக, இப்படி பிரச்சனைக்கு மேல் பிரச்சனைகள் வந்து கொண்டேயிருக்கும். பாவங்கள், மனிதனை விரக்தியின் விளிம்பிற்கே கொண்டு சென்று விடுகின்றன.

**பாவங்களினால் உலக வாழ்க்கை நரகமாக!**

முஸ்லிஹுல் உம்மத் ஹள்ரத் மௌலானா ஷாஹ் வலியுல்லாஹ் ஸாஹிப் அவர்கள் உங்கள் விருப்பப்படி பாவங்களில் ஈடுபட்டுக்கொண்டே இருங்கள்! அல்லாஹ் உங்கள் வாழ்க்கையை நரகமாக மாற்றாவிட்டால், பின்னர் கேளுங்கள்! என்று கூறுவார்கள். அதாவது நரகத்தில் ஏற்படுகின்ற திகிலைப் போன்று இப்பொழுதே ஏற்படுத்திவிடுவான். எனவே, சுதந்திரமாக பாவங்கள் செய்து கொண்டிருப்பவர்கள் நிம்மதியாகத்தானே இருக்கிறார்கள்! என்று நினைத்துவிடாதீர்கள்! அவர்கள் படுகின்ற துயரங்கள், தூக்கமின்றி தவிக்கும் இரவுகள், மரணம் வராதா? என எதிர்பார்க்கின்றனர்.

நியாயம், நேர்மை மறுமையில் மட்டுமல்ல, பாவங்களின் தண்டனை உலகத்திலேயும் கிடைத்துவிடும் என்று உருது கவிஞர் ஒருவர் கூறுகிறார்.

மறுமையில் தண்டனை இருக்கவே இருக்கிறது. அதற்கு முன்னால் உலகத்திலேயே தண்டனை துவங்கிவிடுகிறது.

كَذٰلِكَ الْعَذَابُ ۗ وَلَعَذَابُ الْاٰخِرَةِ اَكْبَرُ இதுவோ உலகத்தில் கிடைத்த தண்டனை; மறுமையின் வேதனையோ மிகப்பெரியதாகும். (அல்குர்ஆன் 68:33) இதனால்தான் இரக்கமுள்ள இறைவன், வெளிப்படையான பாவத்தையும், அந்தரங்கமான பாவத்தையும் விட்டுவிடுங்கள்! என்று கட்டளையிடுகிறான்.

**பாவத்தின் பாதிப்பு**

பாவத்தின் பாதிப்பு கண்டிப்பாக ஏற்படும் என்பதை குர்ஆன் நமக்கு தெளிவுபடுத்துகிறது.

يٰۤاَيُّهَا النَّاسُ اِنَّمَا بَغْيُكُمْ عَلٰۤى اَنْفُسِكُمْ மனிதர்களே! உங்களுடைய அட்டூழியமெல்லாம் உங்களுக்கே கேடாக முடியும். (அல் குர்ஆன் 10:23) ஒரு தாபிஃ(ரஹ்)அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் கட்டளைப்படி நடப்பதில் எனக்கு சோம்பல் ஏற்படும் போதெல்லாம் அதன் விளைவை என் மனைவியின் மூலம், வாகனத்தின் மூலம், அல்லது பிள்ளைகளின் மூலம், ஏதாவது ஒரு வகையில் நான் கண்டுகொள்வேன். இதனை அல்லாஹ், தன் திருமறையில்

وَلَا يَحِيْقُ الْمَكْرُ السَّيِّئُ اِلَّا بِاَهْلِهٖ



பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்

தீமைகள் செய்வதற்கான சூழ்ச்சி அவரின் குடும்பத்தார்களைத் தவிர வேறெவரையும் சூழ்ந்து கொள்ளாது (அல் குர்ஆன் 35:43) என்று கூறுகிறான். ஆகையால், நாம் மட்டும் அந்நிய பெண்களை சாடையாக பார்த்துக் கொள்கிறோம் என்று எண்ணிக்கொள்ள வேண்டாம்! இதனால் நம் மனைவியையும் மற்றவர்கள் கெட்ட எண்ணத்தோடு பார்க்க நேரிடலாம்.

**தட்டானின் துணைவியும், தத்தெடுத்த சிறுவனும்**

தங்க நகை செய்யும் தொழிலாளி ஒருவருக்கு நன்நடத்தையும், சௌந்தரியமும்மிகுந்த மனைவியை அல்லாஹ் வழங்கியிருந்தான். ஒரு நாள் அவர் தன் வேலைகளை முடித்துவிட்டு வீடு திரும்பினார். மனைவி கண்ணீர் ததும்ப அழுது கொண்டிருப்பதை பார்த்து பதறிய அவர், காரணம் கேட்டார். பத்து வருடமாக நாம் வளர்த்து வந்த வேலைக்கார சிறுவன் இப்பொழுதுதான் சற்று பெரியவனாக ஆனான். இன்று காய்கறி வாங்கிவந்து கொடுத்த அவன், என் கையை பிடித்து அமுக்கினான். அவனது கெட்ட எண்ணத்தை உணர்ந்த நான் அழ ஆரம்பித்துவிட்டேன். பத்து வருடமாக பார்த்து வளர்த்த சிறுவனுக்கு இப்படிப்பட்ட எண்ணமா? இவ்வளவு துரோகம் செய்வான் என்று நினைக்கவே இல்லை என்று கூறினாள். இதனை கேட்ட கணவரின் கண்களில் கண்ணீர் வழிந்தது, பதைபதைத்துப் போன மனைவி, நீங்கள் ஏன் அழுகின்றீர்கள்? என்று வினவினாள். இது அவனது குற்றமல்ல, என்னுடைய குற்றத்தின் வெளிப்பாடாகும். ஏனெனில் இன்று வளையல் வாங்க வந்த ஒரு பெண் அதை போட்டு பார்க்க ஆசைப்பட்டு, என்னை போட்டுவிட சொன்னாள். நான் வளையல் போட்டுவிடும் போது அந்த பெண்ணின் கை அழகாக தெரிந்தது. நான் இச்சையுடன் அதை தொட்டேன். இதன் விளைவால் அதே போன்ற அசம்பாவிதம் என் மனைவியிடமும் ஏற்பட்டுவிட்டது என்று கணவர் கூறினார்.

ஆக மனிதன் பாவம் செய்வதால் கண்ணியமிக்க அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாகி, வாழ்வில் பரக்கத்-அபிவிருத்தியை இழந்து தத்தளிக்கிறான். இதற்கு ஒரே தீர்வு, அந்த பாவங்களை விட்டு தவிர்ந்து தவ்பா செய்வதுதான்.

**அல்லாஹ் இழிவு படுத்தியவனை.......**

அல்லாஹ்விற்கு மாறு செய்து பாவங்களில் மூழ்கி, அல்லாஹ்விடம் போரிட துணிந்துவிட்டால், அல்லாஹ் அவனை எவ்வளவு இழிவுபடுத்திவிடுவான் என்றால், வெளியில் தலை காட்ட முடியாமல் தலைமறைவாக வாழவைத்துவிடுவான்.

وَمَن يُهِنِ اللَّهُ فَمَا لَهُ مِن مُّكْرِمٍ அல்லாஹ் யாரை இழிவு படுத்துகின்றானோ அவனை கண்ணியப்படுத்துபவர் எவருமில்லை (அல் குர் ஆன் 22:18) மதிப்புகள் மிதிக்கப்படும். கௌரவம் குன்றிப்போகும். அவமானத்தால் வீட்டில் இருந்தபடியே இழிவிற்குள்ளாக்கப்படுவான்.

**தவ்பா என்றால் என்ன?**

பாவங்களை விட்டு விலகி, இனி சந்தர்ப்பம் கிடைத்தாலும் அதனை செய்யமாட்டேன் என்று உறுதியெடுப்பதற்கு தவ்பா எனப்படும். அல்லாஹுதஆலா தவ்பாவின் வாசலை எந்த நேரமும் திறந்தே வைத்துள்ளான். மற்ற கதவுகள் சில நேரம் திறந்திருக்கும். சில நேரம் மூடப்பட்டிருக்கும். ஆனால் தவ்பாவின் வாசல் எல்லா நேரமும் திறந்தே இருக்கிறது. இதற்காக அல்லாஹ் தூங்குவதும் கிடையாது. அவனுக்கு சிறு துயிலும் வருவதில்லை. அடியார்களின் பாவமன்னிப்பை - தவ்பாவை எதிர்பார்த்து எந்நேரமும் விழித்தே இருக்கிறான். பாவங்களை மன்னிக்க ஆவலுடன் இருக்கிறான்.

**தவ்பாவிற்கும் இஸ்திக்ஃபாருக்கும் மத்தியில் வேறுபாடு**

செய்துவிட்ட பாவங்களுக்காக மனம் வருந்தி, கைசேதப்பட்டு, பாவமன்னிப்பு தேடுவதற்கு இஸ்திக்ஃபார் எனப்படும். தவ்பா என்பது அந்த பாவங்களை இனி ஒருகாலும் செய்யமாட்டேன் என்று உறுதி கொள்வதற்கு சொல்லப்படும், எனவே நாம், செய்துவிட்ட பாவங்களுக்கு மன்னிப்பு கேட்டு, இனி அந்த பாவங்களில் ஈடுபடாமல் பேணிக்கையாக வாழ உறுதியெடுக்க வேண்டும்! அல்லாஹ்வும் தவ்பா செய்பவர்களை கண்டு மிக்க மகிழ்ச்சியடைகிறான். மகிழ்ச்சியின் வெளிப்பாடாக

فَأُولَٰئِكَ يُبَدِّلُ اللَّهُ سَيِّئَاتِهِمْ حَسَنَاتٍ அவர்களின் தீமைகளை நன்மைகளாக அல்லாஹ் மாற்றிவிடுகிறான் (அல் குர்ஆன் 25:70)





**அல்லாஹ்வின் அருள்பார்வை யார் மீது?**

ஒரு விஷயத்தைப் பற்றி சில வாலிபர்கள், ஆதாரங்களை கூறி வாதிட்டுக் கொண்டிருந்தனர். அவர்களுக்கருகில் ஒரு பெரியார் சென்றார். அப்பெரியாரை அவர்கள் அழைத்து, நாங்கள் ஒரு விஷயத்தில் விவாதித்துக் கொண்டிருக்கிறோம். ஒரு முடிவிற்கு வராமல் இருக்கிறது. எங்களில் யார் சத்தியத்தில் இருக்கிறார்? என்பதை தாங்கள் முடிவு செய்யுங்கள்! என்று கூறிவிட்டு, அந்த விஷயத்தை கூறினார்கள்.

அல்லாஹ்வின் அருள் பார்வை, பாவமேசெய்யாத பரிசுத்தமான அடியார் மீது அதிகமாக இருக்கும் என்று எங்களில் சிலர் கூறுகிறார்கள்.மற்றசிலர், பெரிய பாவத்தை செய்துவிட்ட போதிலும் உண்மையான முறையில் மனம் வருந்தி அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு தேடி மன்றாடும் அடியார்கள் மீது அல்லாஹ்வின் பிரத்தியேகமான அருள் பார்வை இருக்கிறது என்று கூறுகிறார்கள். உண்மைநிலை என்ன என்பதை தாங்கள் கூறுங்கள்! என்று கேட்டுக் கொண்டார்கள். இதைக் கேட்ட அப்பெரியார், பிள்ளைகளே! ஆதாரங்களை ஆராய்ந்து சரியான தீர்வு கூறுவதற்கு நான் ஆலிமல்ல, இருப்பினும் அனுபவப்பூர்வமான ஒரு விஷயத்தை மட்டும் நான் தங்களுக்கு கூறுகிறேன். நான் ஒரு நெசவாளி, துணியை நெய்யும்போது ஏதாவது ஒரு நூல் அறுந்துவிடும். அறுந்த அந்த நூலை முடிச்சிபோட்டு மீண்டும் நெய்ய துவங்குவேன். அப்படி நெய்யும் போது அறுந்த அந்த நூல் சரியாக இருக்கிறதா? என்று அந்த நூலின் மீது மட்டும் தனி கவனம் இருந்து கொண்டே இருக்கும். இதே போன்று அடியான் பாவம் செய்ததின் காரணமாக அல்லாஹ்வுடனுள்ள தொடர்பை துண்டித்து பின்னர் உண்மையான முறையில் தவ்பா செய்வதின் மூலம் மீண்டும் தொடர்பை ஏற்படுத்திக்கொண்ட அடியானின் மீது அல்லாஹ்வின் பிரத்தியேகப் பார்வை இருக்க சாத்தியமுள்ளது என்று கூறினார்கள். (அல்லாஹு அக்பர் கபீரா)

**அல்லாஹ்வின் அருள் விசாலமானது**

அல்லாஹுதஆலா மிகக் கிருபையாளன். தவ்பா செய்யும் அடியார்களை கண்டு மிக்க மகிழ்ச்சி அடைகிறான், ஆதம்(அலை)

அவர்களுக்கு ஸஜ்தா செய்ய ஷைத்தான் மறுத்த போது இங்கிருந்து நீ வெளியேறி விடு; நிச்சயமாக நீ விரட்டப்பட்டவனாக இருக்கிறாய் என்று கூறி தன் கோபத்தை வெளிப்படுத்திய அந்த நேரத்திலும் ஷைத்தான் தயங்காமல், قَالَ رَبِّ فَأَنْظِرْنِي إِلَىٰ يَوْمِ يُبْعَثُونَ ○ قَالَ فَإِنَّكَ مِنَ الْمُنْظَرِينَ என் ரப்பே! அவர்கள் எழுப்பப்படும் நாள் வரை எனக்கு நீ அவகாசமளிப்பாயாக! என்று கேட்ட வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு நீ அவகாசமளிக்கப்பட்டவர்களில் உள்ளவனாய் இருக்கிறாய்(அல் குர்ஆன் 15:37) என்று கூறினான்.

உலமாக்கள், இங்கு ஒரு நுட்பமான விஷயத்தை எழுதியுள்ளார்கள்: கோபமான நிலையிலும் சீரழிந்த ஷைத்தானுக்கே அவன் கேட்ட அவகாசத்தை கொடுத்த அல்லாஹ், முஹம்மது ﷺ அவர்களின் உம்மத்தாகிய நாம், அல்லாஹ்விடம் தவ்பா செய்தால் ஏற்றுக்கொள்ளமாட்டானா? நிச்சயமாக ஏற்றுக் கொள்வான்.

ஆதம்(அலை) அவர்களின் காரணத்தினால்தான், நான் இழிவிற்குள்ளானேன். எனவே, ஆதமின் சந்ததியினரை வழிகெடுப்பேன் என்று சத்தியமிட்டு ஷைத்தான் கூறினான்.

قَالَ فَبِعِزَّتِكَ لَأُغْوِيَنَّهُمْ أَجْمَعِينَ உன் மகத்துவத்தின் மீது சத்தியமாக, நிச்சயமாக நான் அவர்கள் அனைவரையும் வழிகெடுத்துவிடுவேன். (அல் குர்ஆன் 38:82)

ثُمَّ لَآتِيَنَّهُمْ مِنْ بَيْنِ أَيْدِيهِمْ وَمِنْ خَلْفِهِمْ وَعَنْ
أَيْمَانِهِمْ وَعَنْ شَمَائِلِهِمْ وَلَا تَجِدُ أَكْثَرَهُمْ شَاكِرِينَ

அவர்களுக்கு முன்னாலும், அவர்களுக்கு பின்னாலும், அவர்களின் வலப்புறங்களிலும், அவர்களின் இடப்புறங்களிலும் (வழி கெடுக்க) அவர்களிடம் நிச்சயமாக நான் வருவேன்; அவர்களில் பெரும்பாலோரை நன்றி செலுத்துபவர்களாக நீ காணமாட்டாய் என்று கூறினான்(அல் குர்ஆன் 7:17)

அல்லாஹ்வின் அருள் அபரிமிதமானது. அனைத்தையும் மிஞ்சியது. எனவே அல்லாஹ் ஷைத்தானை நோக்கி என் அடியார்களை வழிகெடுப்பேன், எனக்கு மாறு செய்ய வைப்பேன் என்று கூறுகிறாயா? நான் கூறுவதையும் கேட்டுக்கொள்! என் அடியார்கள், மனிதர்கள் என்ற அடிப்படையில் பாவங்கள்





செய்துவிட்டாலும், என்னிடம் தவ்பா செய்துவிட்டால் அனைத்து குற்றங்களையும் நான் மன்னித்துவிடுவேன். குற்றமேசெய்யாதவர்களைப் போன்று ஆக்கிவிடுவேன் என்று கூறினான்.

**அல்லாஹ் தவ்பாவை ஏற்க சடைவதில்லை தவ்பா செய்ய நாம் ஏன் சடைவடைய வேண்டும்?**

மக்கள் எத்தனை முறை தவ்பா செய்தாலும் அவைகளை ஏற்க அல்லாஹ் சடைவடைவதில்லை என்றிருக்க, நாம் தவ்பா செய்ய ஏன் சடைவடைய வேண்டும்?

பாவம் செய்துவிட்ட என் அடியார்களே ! ஷைத்தான் உங்களை வழி கெடுத்துவிட்டான். என்னிடம் வந்துவிடுங்கள்! என்று அல்லாஹ் அழைக்கிறான்.

أَلَمْ أَعْهَدْ إِلَيْكُمْ يَا بَنِي آدَمَ أَنْ لَا تَعْبُدُوا الشَّيْطَانَ إِنَّهُ لَكُمْ
عَدُوٌّ مُبِينٌ ○ وَأَنِ اعْبُدُونِي هَٰذَا صِرَاطٌ مُسْتَقِيمٌ

ஆதமுடைய மக்களே! நீங்கள் ஷைத்தானை வணங்கக் கூடாது; நிச்சயமாக அவன் உங்களுக்குப் பகிரங்கமான விரோதி என்று உங்களிடம் நான் உறுதிமொழி வாங்கவில்லையா?என்னையே நீங்கள் வணங்க வேண்டும்; இதுவே நேரான வழி. (அல் குர்ஆன் 36:60,61)

பாசத்துடன் அல்லாஹ் கூறுவதைக் கேளுங்கள்!

يَا أَيُّهَا الْإِنْسَانُ مَا غَرَّكَ بِرَبِّكَ الْكَرِيمِ மனிதனே! தயாளனான உமதிரட்சகனுக்கு மாறு செய்யும்படி உன்னை எது ஏமாற்றியது! (அல் குர்ஆன் 82:06) எப்படியாவது மனிதர்கள் தவ்பா செய்து என்னிடம் வந்துவிடமாட்டார்களா? என்று அல்லாஹ் விரும்புகிறான்.

**தலையை உயர்த்துவதற்கு முன்னால் மன்னித்துவிடுவேன்**

சீரழிந்த ஷைத்தான் மனிதர்களுக்கு முன்னாலும், அவர்களுக்கு பின்னாலும், அவர்களின் வலப்புறங்களிலும், அவர்களின் இடப்புறங்களிலும் அவர்களை வழிகெடுக்க நான் வருவேன் என்று அல்லாஹ்விடமே கூறியதைக் கண்டு மலக்குமார்கள் திகைப்படைந்தனர். அப்பொழுது அல்லாஹ்

மலக்குமார்களிடம் ஏன் நீங்கள் திகைப்படைகிறீர்கள்? திகைப்படைய தேவையில்லை என்று கூறினான். அப்பொழுது மலக்குமார்கள் யா அல்லாஹ்! மனிதர்களை நாலா புறத்திலும் ஷைத்தான் சூழ்ந்து வழிகெடுத்தால், அவர்கள் அவனது வலையில் சிக்கிக் கொள்வார்களே! என்று ஆதங்கத்துடன் முறையிட்டனர். ஷைத்தான் முன்னால், பின்னால், வலது, இடது என்ற நான்கு திசைகளை மட்டுமேகுறிப்பிட்டுள்ளான். மேல், கீழ் என்ற இரு திசைகளை மறந்துவிட்டான். எனவே, பாவம் செய்துவிட்ட என்னுடைய அடியார்கள் எப்பொழுது மனம் வருந்தி, இனி அந்த பாவத்தை செய்யமாட்டோம் என்ற மன உறுதியுடன் என்னிடம் வந்து இரு கரங்களை மேல் நோக்கி உயர்த்துவார்களோ அப்பொழுது ஷைத்தானின் சூழ்ச்சி அங்கு பலிக்காது. மேல் நோக்கி உயர்த்திய கரங்களை கீழே இறக்குவதற்கு முன்பாக அவர்களின் பாவங்களை நான் மன்னித்துவிடுவேன். மேலும் என் அடியார்கள் தவ்பா செய்வதற்காக தன் தலையை கீழே ஸஜ்தாவில் வைத்துவிட்டால் அந்த கீழ் திசையிலும் ஷைத்தானின் சூழ்ச்சி பலிக்காது. மேலும் அவர்கள் ஸஜ்தாவிலிருந்து தங்கள் தலைகளை உயர்த்துவதற்கு முன்னால் அவர்களின் பாவங்களை நான் மன்னித்துவிடுவேன் என்று அல்லாஹ் மறுமொழி பகர்ந்தான். இந்த இரு திசைகளும் திறக்கப்பட்டே இருக்கின்றன. நாம் கைகளை உயர்த்தி துஆ கேட்டால் அல்லாஹ் மன்னித்துவிடுவான். ஸஜ்தாவில் தலையை வைத்து மன்னிப்பு கேட்டால் அல்லாஹ் நம் மீது இரக்கப்படுவான், எனவே துரிதமாக தவ்பா செய்யுங்கள்!

**விலையுயர்ந்த இரு துளிகள்**

வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாகும் (Import) பொருட்களின் விலை பொதுவாக அதிகமாக இருக்கும். அவை கிடைப்பது அரிது என்பதினால் மக்களும் அதிக விலை கொடுத்து வாங்க தயாராக இருக்கிறார்கள். இதே போன்று பாவம் செய்துவிட்ட அடியார்கள், தங்கள் பாவங்களை எண்ணி வருந்தி அழுகின்ற கண்ணீர் துளிகளை மலக்குமார்கள் அர்ஷிர்க்கு எடுத்து செல்கின்றார்கள். இந்த கண்ணீர் துளிகள் அந்த இடத்தை பொருத்த வரை இறக்குமதி பொருளாகும். எனவே இரக்கமுள்ள இறைவன் அந்த கண்ணீர் துளிகளை முத்து, வைரங்களைப் போல் விலை நிர்ணயித்து வாங்கிக் கொள்கிறான்.





வருத்தத்தினால் வடிந்த கண்ணீர் துளிகளை முத்துக்கள் என்றெண்ணி வள்ளல் வாங்கிக்கொண்டான்.(அல்லாமா இக்பால்)

எனவேதான், இரு துளிகள் அல்லாஹ்விற்கு மிகவும் பிரியமானவைகளாகும். ஒன்று, அல்லாஹுதஆலாவின் அச்சத்தால் சிந்திய கண்ணீர்த்துளி. மற்றொன்று, அல்லாஹுதஆலாவின் பாதையில் சிந்திய ரத்தத்துளி என்று ஹதீஸில் வந்துள்ளது.

மார்க்கப் போரில் கலந்து உயிர்தியாகம் செய்தவர்களின் உடலிலிருந்து வரும் இரத்தத்திற்கு எந்த அந்தஸ்த்தோ அதே அந்தஸ்த்தை அல்லாஹ்வின் அச்சத்தால் வரும் கண்ணீருக்கு வழங்கப்பட்டிருப்பதை சிந்தித்துப் பாருங்கள்! என்று ஹதீஸ் விரிவுரையாளர்கள் கூறுகிறார்கள்.(அல்லாஹு அக்பர்)

அடியார்கள் பாவங்களை விட்டு விலகி தவ்பா செய்து பேணிக்கையான வாழ்கையை மேற்கொண்டால், அல்லாஹ் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறான். அவன் கருணையாளன். பாசமானவன். என் அடியானே! உன் பாவங்கள், வானத்திலுள்ள நட்சத்திரங்களுக்கு நிகராக இருந்தாலும் மணல் துகள்களுக்கு சமமாக இருந்தாலும் அல்லது மரங்களின் இலைகளுக்கு இணையாக இருந்தாலும், உன் பாவங்கள் கடல் நீருக்கு நிகராக இருந்தாலும் என் அடியானே! ரஹ்மத் எனும் என்னுடைய அருளுக்கு முன்னால் அந்த பாவங்கள் குறைவானவையே. எனவே, நீ தவ்பா செய்தால், உன் தவ்பாவை நான் ஏற்றுக்கொள்வேன். அது மட்டுமல்ல, ஒரு பாவத்திற்காக நீ தவ்பா செய்து மீண்டும் அதே பாவத்தை செய்துவிடுகிறாய். மறுபடியும் தவ்பா செய்து, மீண்டும் அதே பாவத்தை செய்துவிடுகிறாய். மறுபடியும் தவ்பா செய்து மீண்டும் அதே பாவத்தை செய்துவிடுகிறாய். இப்படியாக நீ நூறு முறை தவ்பா செய்து முறித்துவிட்டாலும் கூட இப்பொழுதும், எப்பொழுதும் என் கதவு திறந்தே இருக்கிறது. இப்பொழுது நீ தவ்பா செய்தாலும் நான் ஏற்றுக்கொள்ள தயாராக இருக்கிறேன் என்று அல்லாஹ் கூறுகிறான்.

**படைத்தவனின் பாசம்**

قُلْ يٰعِبَادِيَ الَّذِيْنَ اَسْرَفُوْا عَلٰٓى اَنْفُسِهِمْ لَا تَقْنَطُوْا
مِنْ رَّحْمَةِ اللّٰهِ ؕ اِنَّ اللّٰهَ يَغْفِرُ الذُّنُوْبَ جَمِيْعًا

தங்களுக்கு தாங்களே அளவு கடந்து (பாவங்கள் செய்து) விட்ட என் அடியார்களே! அல்லாஹ்வின் அருளைவிட்டும்

நிராசையாகிவிட வேண்டாம்; நிச்சயமாக அல்லாஹ் பாவங்கள் அனைத்தையும் மன்னிப்பான். (அல் குர்ஆன் 39:53)

மகன். தந்தைக்கு மாறு செய்தால், தந்தை கோபித்து கொள்கிறார். தன் மனைவியிடம் சென்று அவனை வீட்டை விட்டு போக சொல் என்று யாரையோ பற்றிப் பேசுவதைப்போல் கூறுவார். மாறு செய்த தன் மகன் பெயரை உச்சரிக்கவும் அவர் தயாரில்லை. ஆனால் பாவம் செய்த அடியார்கள், தண்டனைக்கு தகுதியானவர்களாக இருந்தபோதிலும் அவர்களை அல்லாஹ் தன் பக்கம் இணைத்து என் அடியார்கள் என்று கூறுகிறான். சுப்ஹானல்லாஹ்......! அல்லாஹ் எவ்வளவு இரக்கமுள்ளவன் என்பதை பார்த்தீர்களா? அவனுக்கு மாறுசெய்த போதிலும், என் அடியார்கள் என்றே அழைக்கிறான். நம்மைஒதுக்கி தள்ளிவிடாமல் அரவணைக்கிறான். (அல்லாஹு அக்பர்)

மேலும் கூறுகிறான்: நீங்கள் பாவங்கள் செய்துவிட்ட போதிலும் அல்லாஹ்வின் அருளைவிட்டு நிராசையடைய வேண்டாம்! நிச்சயமாக அல்லாஹ் பாவங்கள் அனைத்தையும் மன்னிப்பான்; நிச்சயமாக அவன்தான் மிகவும் மன்னிப்பவன், மிகக்கிருபையாளன். (அல் குர்ஆன் 39:53)

**படிப்பினைக்குரிய நிகழ்ச்சி**

ஹாபிழ் இப்னு கய்யும் (ரஹ்) அவர்கள் ஒரு ஆச்சரியமான நிகழ்ச்சியை எழுதியுள்ளார்கள் : நான் ஒரு முறை ஒரு தெரு வழியாக சென்று கொண்டிருந்தேன். அங்கு ஒரு வீட்டில் எட்டு, ஒன்பது வயது சிறுவனை அவனுடைய தாய் அடித்து வீட்டை விட்டு வெளியாக்கிக் கொண்டிருந்தாள். மேலும், நீ மாறுசெய்பவனாகிவிட்டாய், என் பேச்சை நீ கேட்பதே இல்லை, எந்த வேலையும் செய்வதில்லை. நீ சென்றுவிடு! என் முகத்தில் முழிக்காதே! எனக் கூறி வெளியில் தள்ளி கதவை தாழிட்டுக்கொண்டாள். நான் அங்கேயே நின்று நடப்பதை பார்த்துக் கொண்டிருந்தேன். அடிவாங்கியதால் அந்த சிறுவன் அழுது கொண்டேயிருந்தான்.





சிறிது நேரம் கழித்து எழுந்தான். ஆழ்ந்து சிந்தித்தவனாக ஓரமாக மெல்ல நடக்க ஆரம்பித்தான். தெரு முனை வந்தது. அங்கு நின்று சிந்திக்கலானான். பின்னர் திரும்பி வீட்டிற்கு வர ஆரம்பித்தான். அழுது அழுது களைத்துவிட்ட காரணத்தால் வீட்டுவாசற்படியில் தலைவைத்து தூங்கிவிட்டான். சிறிது நேரத்திற்கு பின்னால் ஏதோ வேலையாக தாய் கதவை திறந்தாள். மகன் வாசற்படியில் தலை வைத்து தூங்கிக்கொண்டிருப்பதை பார்த்தாள். கோபம் இன்னும் தணிந்தபாடில்லை. ஏன் வந்தாய்? சென்றுவிடு! என்று திட்டினாள். இப்பொழுது அந்த சிறுவன் எழுந்து அழ ஆரம்பித்துவிட்டான். இன்னும் அழுது கொண்டே உயிரிலும் மேலான என் தாயே! என்னை தாங்கள் வீட்டைவிட்டு வெளியேற்றிவிட்டீர்கள். நான் சென்று கடை வீதிகளில் பிச்சை எடுத்தாலும் எனக்கு உணவு கிடைத்துவிடும். இதே போல் யாருடைய செருப்பையாவது துடைத்து விட்டு பிழைத்துக்கொள்வேன். அல்லது ஏதாவது ஒரு வீட்டில் வேலை பார்த்தால் உண்ண உணவும் உறங்க இடமும் கூட கிடைத்துவிடும் என்று எண்ணியவனாக இந்த தெரு முனை வரை சென்றேன். ஆனால் என் மீது நீங்கள் வைத்துள்ள பாசத்தை உலகில் எங்கும் என்னால் பெற்றுக்கொள்ள முடியாது என்பதை நினைத்து பார்த்த நான் திரும்பி வந்துவிட்டேன். என் தாயே! நீங்கள் என்னை அடித்தாலும், விரட்டினாலும் இந்த வாசலை விட்டு எங்கும் செல்லமாட்டேன் என்று அந்த மகன் கூறினான். இதை கேட்ட தாய் துடிதுடித்துப்போனாள். தாய் பாசம் அல்லவா! தன் மகனை வாரி நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள். இன்னும் என் மகனே! தாய் பாசத்தை உலகில் என்னைத் தவிர வேறு யாரிடமும் நீ பெற்றுக்கொள்ளமுடியாது என்ற எண்ணம் உன் உள்ளத்தில் குடிகொண்டிருந்தால் உனக்காக என் கதவு திறந்திருக்கிறது என்று கூறினாள். இந்த சம்பவத்தை கூறுவிட்டு ஹாபிழ் இப்னு கைய்யும் (ரஹ்) கூறுகிறார்கள்: பாவம் செய்துவிட்ட அடியார்கள், என்னுடைய ரப்பு என் மீது எவ்வளவு பாசம் வைத்துள்ளானோ அவ்வளவு பாசத்தை யாரும் என் மீது வைக்க முடியாது. என் பாவங்களையும் என் குற்றங்களையும் அவனைத் தவிர வேறு யாரும் மன்னிக்க முடியாது என்றெண்ணியவர்களாக அல்லாஹ்விடம் மன்றாடி தவ்பா செய்தால்,

அல்லாஹ்வும் அந்த அடியானை அரவணைத்துக் கொள்வான். மன்னித்துவிடுவான்.

إِلٰهِي عَبْدُكَ الْعَاصِي أَتَاكَ
مُقِرًّا بِالذُّنُوبِ وَقَدْ دَعَاكَ
فَإِنْ تَغْفِرْ فَأَنْتَ لِذَاكَ أَهْلٌ
فَإِنْ تَطْرُدْ فَمَنْ يَرْحَمُ سِوَاكَ

யா அல்லாஹ் ! பாவியான உன் அடியான் உன் சன்னிதானத்தில் வந்துவிட்டான். பாவங்களை ஒப்புக்கொண்டவனாக வந்துவிட்டான். இன்னும் உன்னிடம் வேண்டி கேட்டுக்கொள்கிறேன். நீ மன்னித்துவிட்டால் அது உனக்கு மிக அழகானதாகும். நீ கைவிட்டால் உன்னை தவிர என் மீது இரக்கப்படுபவர் யார்!

ஆக இப்படி உண்மையான முறையில் பாவங்களை விட்டு தவ்பா செய்தால், அல்லாஹ் தன் அருள் வாசல்களை திறந்துவிடுகிறான்.

எங்கள் ரப்பே! எங்கள் மீது நீ கருணை காட்டுவாயாக ! உண்மையான முறையில் தவ்பா செய்ய தவ்ஃபீக் செய்வாயாக ! கழிந்த காலத்திற்கு கஃப்பாராவாக வருங்காலத்தை ஆக்குவாயாக ! சென்ற காலத்தை விட வருங்காலத்தை சிறப்பாக்கி வைப்பாயாக ! ஆமீன்

وَاٰخِرُ دَعْوَانَا أَنِ الْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ





## அந்நியப் பெண்களைப் பார்ப்பதினால் ஏற்படும் விபரீதங்களும் அதை விட்டு தவிர்ந்து கொள்ளும் வழிமுறைகளும்.

( நபியே! ) முஃமினான ஆண்களுக்கு நீர் கூறுவீராக! அவர்கள் தங்கள் பார்வைகளை தாழ்த்திக் கொள்ளவும். தங்களின் மறைவிடங்களையும் பாதுகாத்துக் கொள்ளவும். (24:30)

( நபியே! ) முஃமினான பெண்களுக்கு நீர் கூறுவீராக! அவர்கள் தங்கள் பார்வைகளை தாழ்த்திக் கொள்ளவும். தங்களின் மறைவிடங்களையும் பாதுகாத்துக் கொள்ளவும். (24:31)

மனிதன் மானக்கேடான காரியங்களில் மூழ்கிவிட மூலக் காரணம், அவன் தன்னுடைய பார்வையை கடிவாளமிட்டு கட்டுப்படுத்தாததேயாகும். எனவேதான் கெட்ட பார்வையை உம்முல்கபாயிஸ் - மானக்கேடான பாவங்களின் தாய் என்று மார்க்க விற்பன்னர்கள் கருதுகிறார்கள்.

கண்கள், ஃபித்னா - அசம்பாவிதங்கள் பொங்கிவரும் ஊற்றாகஇருக்கின்றன. இந்நிலையில் பெண்கள் நிர்வாணமாக சுற்றித் திரிவது இந்த ஃபித்னாவை மென்மேலும் அதிகப்படுத்திவிடுகிறது.

ஹள்ரத் ஷைகுல் ஹதீஸ் ஜகரிய்யா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் : கெட்ட பார்வை மிக மோசமான வியாதியாகும். ஆரம்பத்தில் சிலருக்கு திக்ரு செய்வதில் அதிக ஆர்வம் இருக்கும். ஆனால் இந்த கெட்ட பார்வை அந்த ஆர்வத்தையும் வணக்க வழிபாடுகளில் ஏற்படும் இன்பத்தையும் அழித்துவிடுகிறது. பிறகு சிறிது சிறிதாக அவர் நல்ல அமல்கள் செய்வதை முழுமையாக விட்டுவிடுகிறார்.(ஆப்பீத்தி பாகம்:2,பக்கம்:418)

ஷைகு வாஸிதி (ரஹ்) அவர்கள் அடிக்கடி கூறுவார்கள்; அல்லாஹ் ஒரு மனிதனை கேவலப்படுத்த நாடிவிட்டால் அழகிய முகங்களை பார்க்கும் பழக்கத்தை அவனுக்கு ஏற்படுத்திவிடுவான்.

சீவி சிங்காரித்து கவர்ச்சியாக வலம்வரும் பெண்களும் அவர்களை இச்சையுடன் பார்க்கும் ஆண்களும் அல்லாஹ்வின் சாபத்திற்குரியவர்களாகும். நெருப்புக் குண்டம் சிறிய தீப்பொறியினால் உருவாகுவதைப் போல் விபரீத குற்றங்கள் கெட்ட பார்வையின் மூலம் உருவாகின்றன. எனவே வெட்கத் தலங்களை பாதுகாக்க பார்வையை தாழ்த்துவது மிக அவசியமாகும்.

நாம் நம்முடைய கண்களுக்கு திரையிடாவிட்டால் நம் உள்ளங்களின் மீது திரை போடப்படும். எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள்!

தீய பார்வையை விட்டு விலகியிருக்க சில வழி முறைகளை முரீதீன்களுக்கு ஷைகுமார்கள் குறிப்பிடுகிறார்கள் :

1. பாதையில் செல்லும் போது பார்வையை மிகவும் தாழ்த்திக்கொள்ள வேண்டும். அருகில் செல்பவர்கள் ஆணா பெண்ணா என்பதைக் கூட பாதங்களை வைத்து அனுமானித்துக் கொள்ள வேண்டும்.

2. சூப்பர் மார்கெட் மற்றும் டிக்கெட் கவுண்டர் போன்றவற்றில் ஆண்கள் இருக்குமிடத்தை தேர்ந்தெடுக்க வேண்டும். இதனால் பெண்களிடம் பேசும் சந்தர்ப்பம் தவிர்க்கப்படுகிறிது.

3. அந்நியப் பெண்களிடம் பேச வேண்டிய நிர்பந்தம் எற்பட்டால் சண்டையிட்டுக் கொண்ட இரு நபர்கள் பேசுவதைப் போல் முகத்தை பார்க்காமல் பேசுங்கள்.

4. சாலை ஓரங்களில் ஒட்டப்பட்டுள்ள சினிமா போஸ்டர்களை பார்க்காதீர்கள்!





5. வாகனத்தில் செல்லும் போது அருகில் செல்லும் வாகனத்தில் அமர்ந்துள்ள பெண்களின் பக்கம் கவனத்தை செலுத்தாதீர்கள்!

6. தம் வீடாக இருந்தாலும் அந்நியப் பெண்கள் உள்ளே இருக்கும் போது அவர்கள் தங்களை மறைத்துக் கொள்ள வேண்டும் படி முன்னெச்சரிக்கை செய்த பின் நுழைய வேண்டும்.

7. அடுத்தவர் வீட்டிற்கு சென்றால் வாசலுக்கு நேராக நிற்கக்கூடாது.

8. ஆண்களும் பெண்களும் கலந்திருக்கும் கூட்டங்களுக்கு அறவே செல்லாதீர்கள்! பெண்கள் நடமாட்டம் இல்லாத பாதையில் செல்லுங்கள்!

9. சுற்றுலாத் தலங்களுக்கு செல்லாதீர்கள்! அப்படி செல்வதாகஇருந்தால் மற்றவர்கள் செல்லாத நாளை தேர்ந்தெடுத்து அந்நாளில் செல்லுங்கள்.

10. பஸ், ரயில், விமானம் போன்றவற்றில் பிரயாணம் செய்யும்போது மார்க்க நூல்களை எடுத்துச் சென்று அதை படித்தபடி நேரத்தை கழியுங்கள்! இல்லையெனில் பிரயாணம் செய்யும் பெண்கள் மீது பார்வை படும்.

11. பெண்களின் படம் அல்லது டி.வி. பொருத்தப்பட்டுள்ள பஸ், ரயில், நிலையங்களிலும் தங்கும் விடுதிகளிலும் அலுவலங்களிலும் அந்த திசையில் முதுகை காண்பித்து அமருங்கள்!

12. தேவையின்றி இன்டர்நெட் - இணைய தளத்தை பயன்படுத்தாதீர்கள்!

13. மாற்று மதத்தார் அதிகம் வசிக்கும் பகுதிகளுக்கு சென்றால் யாருடைய முகத்தையும் பார்க்காதீர்கள்.! ஏனெனில் கோடை காலங்களில் அவர்கள் தங்கள் மேனிகளில் அதிகமான பகுதிகளை திறந்தே வைக்கின்றனர். குளிர் காலங்களில் ஆடை அணிந்திருந்தாலும் ஆண்கள், பெண்களுக்கு மத்தியில் வித்தியாசம் இல்லாத அளவிற்கு பெண்கள் ஆண்களைப் போன்று முடிவெட்டிக் கொண்டு கோட் அணிந்து டைய்மாட்டிக் கொண்டு வலம் வருகின்றார்கள். இந்த முஸீபத்திலிருந்து தப்பித்து நம் ஈமானை பாதுகாக்க பார்வையை தாழ்த்துவதைத் தவிர வேறு வழியில்லை.

14. வீட்டில் தனியாக ஒரு போதும் இருக்காதீர்கள்! எந்தவேலையுமின்றி சும்மாவும் இருக்காதீர்கள்!

15. பெண்களின் ஸ்கூல் மற்றும் காலேஜ் இருக்கும் தெருவில் செல்வதை விட்டு விடுங்கள்!

16. திருமணமாகிவிட்டால் தன் மனைவியை சந்தோஷமாக வையுங்கள்!

17. கஃபாவை தவாஃப் செய்யும் போது பாதங்களை பார்க்கும் வண்ணம் பார்வையை தாழ்த்திக் கொள்ளுங்கள்! கண்டிப்பாக பார்வையை உயர்த்தாதீர்கள்!

18. அந்நியப் பெண்களை பார்ப்பதினால் கிடைக்கும் தண்டனைப் பற்றி அடிக்கடி சிந்தியுங்கள்! அந்நியப் பெண்களை பார்த்தவனின் கண்களில் கண்ணாடியை உருக்கி மலக்குமார்கள் ஊற்றுவார்கள்.சூடாக்கப்பட்ட கூர்மையான கம்பிகளை கண்களில் குத்துவார்கள் என்றும் சில கிதாபுகளில் எழுதப்பட்டுள்ளது.

19. அந்நியப் பெண்களை ஒரு முறை பார்த்துவிட்டால் இருபது ரகஅத் தொழுவேன் என்ற தண்டனையை நடைமுறைப்படுத்துங்கள்! இன்ஷா அல்லாஹ் சில தினங்களில் பார்வையை தாழ்த்த ஆரம்பித்துவிடுவீர்கள்.





20. ஒவ்வொரு மாதமும் 13,14,15 ஆகிய தினங்களிலும் திங்கள் மற்றும் வியாழக்கிழமைகளிலும் நோன்பு நோற்றுவாருங்கள்! இந்த நோன்புகள் நோற்றும் பார்வையை கட்டுப்படுத்த முடியாவிட்டால் ஹள்ரத் தாவூத்(அலை) அவர்களைப் போல் ஒரு நாள் விட்டு ஒரு நாள் நோன்பு வையுங்கள்!

21. கீழ் காணும் தஸ்பீஹை காலையிலும் மாலையிலும் 100, 100 முறை ஓதுவதை வழமையாக்கிக் கொள்ளுங்கள்!

لَا مَرْغُوْبِيْ اِلَّا اللهُ

لَا مَطْلُوْبِيْ اِلَّا اللهُ

لَا مَحْبُوْبِيْ اِلَّا اللهُ

لَا اِلٰـــهَ اِلَّا اللهُ

எனக்கு விருப்பமானவன் அல்லாஹ் தான்.
நான் தேடுவது அல்லாஹ்வைத் தான்.
எனக்கு பிரியமானவன் அல்லாஹ் தான்.
வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை.

22. தினமும் தஹஜ்ஜுத் தொழுகைக்காக எழுந்து அல்லாஹ்விடம், யா அல்லாஹ்! பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பது எனக்கு சிரமமாக இருக்கிறது. ஆனால் பாவங்களில் ஈடுபடாமல் என்னை பாதுகாப்பது உனக்கு லேசான காரியமாகும். எனவே என் இறைவா! என் உள்ளத்தை தூய்மைப்படுத்தி விடுவாயாக! என் பார்வையைபரிசுத்தப்படுத்துவாயாக! என்று துஆ செய்யுங்கள்!

கெட்ட பார்வையை விட்டு விலகி தம் பார்வையை பாதுகாத்துக் கொள்ளும் மனிதருக்கு மறுமையில் இரு வெகுமதிகள் வழங்கப்படும்.

1. பார்வையை தாழ்த்திய ஒவ்வொரு முறைக்கும் அல்லாஹ்வை பார்க்கும் பாக்கியம் கிடைக்கும். 2. மறுமையில் அழுவதை விட்டு அந்த கண் பாதுகாக்கப்படும்.

## நக்ஷபந்தியா தரீகாவின் அன்றாட அமல்கள்

**1) உகூஃபே கல்பி** (ஒவ்வொரு நொடியிலும் அல்லாஹு தஆலாவின் சிந்தனை)

دست بكار دل بيار “உடல் உலக அலுவல்களில் ஈடுபட்டிருந்தும் உள்ளம் தனது நேசனான அல்லாஹு தஆலாவின் பால் குடி கொண்டுள்ளது.” என்ற கவிக்கேற்ப ஒவ்வொரு நொடியிலும் தனது கவனத்தை அல்லாஹு தஆலாவின் பால் செலுத்திக் கொண்டிருப்பது.

அல்லாஹு தஆலா கூறுகிறான் : – فَاذْكُرُوا اللّٰهَ قِيَامًا وَّقُعُوْدًا وَّعَلٰى جُنُوْبِكُمْ

நின்ற நிலையிலும், இருந்த இருப்பிலும், தங்கள் விலாப் புறங்களில் (சாய்ந்து) இருக்கும் போதும் அல்லாஹ்வை நினைவு கூறுங்கள். (அன்னிஸா : 103)

**2) முராகபா** (அல்லாஹு தஆலாவின் ரஹ்மத்தை எதிர்பார்த்து காத்திருத்தல்)

அனுதினமும் 24 மணி நேரத்திற்கிடையே இருமுறை ½ மணி நேரத்திற்காக உலகம் மற்றும் அதில் இருக்கும் அனைத்தையும் விட்டு அகன்று அல்லாஹு தஆலாவுடன் முழுமையாக ஒன்றித்து, அமர்ந்த வண்ணமாக, “அல்லாஹுதஆலாவின் ரஹ்மத்து இறங்குகின்றது, எனதுள்ளத்தில் குடி புகுகின்றது, எனதுள்ளத்தில் இருக்கும் பாவங்களின் இருளும், கருமையும் விலகி தூரமாகின்றது.

மேலும், எனதுள்ளம் நன்றி செலுத்தும் முகமாக الله الله الله எனக் கூறுகின்றது.” என்ற எண்ணம் கொள்வது.





அல்லாஹு தஆலா கூறுகிறான் : –

وَاذْكُرْ رَّبَّكَ فِيْ نَفْسِكَ تَضَرُّعًا وَّخِيْفَةً وَّدُوْنَ الْجَهْرِ مِنَ الْقَوْلِ بِالْغُدُوِّ وَالْاٰصَالِ

(நபியே!) நீர் உம் மனதிற்குள் பணிவோடும், அச்சத்தோடும் (மெதுவாக) உரத்த சப்தமின்றி காலையிலும், மாலையிலும் உம் இறைவனின் (திரு நாமத்தை) திக்ரு செய்து கொண்டு இருப்பீராக. (அல் – அஃராஃப் : 205)

**3) திருக்குர்ஆனை ஓதுவது**

அனுதினமும் ஒரு (ஜுஸ்வு) பாகத்தை ஓதுவது.

அல்லாஹு தஆலா கூறுகிறான் : –

فَاقْرَءُوْا مَا تَيَسَّرَ مِنَ الْقُرْاٰنِ

நீங்கள் குர்ஆனில் உங்களுக்குச் சுலபமான அளவு ஓதுங்கள்.

( அல் முஸ்ஸம்மில் : 20)

**4) இஸ்திக்ஃபார் (பாவமன்னிப்பு கேட்பது)**

அனுதினமும் காலையிலும், மாலையிலும் நூறு முறை கீழ்க்காணும் பாவ மன்னிப்பை கேட்பது :

اَسْتَغْفِرُ اللّٰهَ رَبِّيْ مِنْ كُلِّ ذَنْبٍ وَّاَتُوْبُ اِلَيْهِ

அல்லாஹு தஆலா கூறுகிறான் : –

اِسْتَغْفِرُوْا رَبَّكُمْ ثُمَّ تُوْبُوْا اِلَيْهِ

நீங்கள் உங்களுடைய இறைவனிடம் பாவமன்னிப்பு கேளுங்கள்; இன்னும் (தவ்பா செய்து) அவன் பக்கமே மீளுங்கள். (ஹூது : 52)

**5) நபிகளாரின் மீது ஸலவாத்து கூறுவது :**

அனுதினமும் காலையிலும், மாலையிலும் நூறு நூறு முறை அல்லாஹு தஆலாவின் தூதர் நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மீது கீழ்க்காணும் ஸலவாத்தை கூறுவது :

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا
مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

அல்லாஹு தஆலா கூறுகிறான் : –

يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا صَلُّوْا عَلَيْهِ وَسَلِّمُوْا تَسْلِيْمًا

ஈமான் கொண்ட விசுவாசிகளே! நீங்களும் அவர் மீது ஸலவாத்துச் சொல்லி அவர் மீது ஸலாமும் சொல்லுங்கள். (அல்–அஹ்ஜாப் : 56)

**6. ஆத்மீக ஆசானான தனது ஷேக் அவர்களுடன் தொடர்புடனிருப்பது :**

அல்லாஹு தஆலாவின் மகத்துவமிக்க தீனை கற்பது மற்றும் தர்பியத்து எனும் ஆத்மீக பயிற்சி பெற தனது ஆத்மீக ஆசானான ஷேக் அவர்களுடன் கடிதத் தொடர்பு அல்லது தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டிருப்பது. மேலும், எப்பொழுதேனும் சமய சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுதெல்லாம் ஷேகு அவர்களின் சகவாசத்தில் நேரத்தை கழிப்பது.

அல்லாஹுதஆலா கூறுகிறான் : –

اِتَّقُوا اللّٰهَ وَكُوْنُوْا مَعَ الصّٰدِقِيْنَ

அல்லாஹ்வைக் கொண்டு பயந்து கொள்ளுங்கள், மேலும் உண்மையாளர்களுடன் இணைந்திருங்கள் : (அத்தவ்பா: 119)



# ஹள்ரத் பீர் ஸாஹிப் அவர்களின் சீரிய உரைகளில் எமது வெளியீடுகள்

1. بدنظری کے نقصانات (اردو)

(தமிழில், ٹمل)

2. அந்நிய பெண்களை பார்பதினால் ஏற்படும் விபரீதங்கள்

(ஆங்கிலத்தில், انگریزی)

3. **SIN OF THE EYE**

(இச்சிறு நூல் தெலுங்கு மொழியிலும் கிடைக்கும்)

4. معلوماتِ یومیہ (نقشبندیہ)

(தமிழில், ٹمل)

5. அன்றாட அமல்கள் (நக்ஷ்பந்தீ)

6. گناہوں کے نقصانات (ٹمل)

பாவத்தின் பாதிப்புகள்

7. رب غفار کا گنہ گاروں سے پیار (ٹمل)

பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்

*Publisher*

**MUFTI SHAKEEL AHMED NAQSHBANDI**
Chennai, Tamil Nadu, India.
Cell : +91 - 94444 53232
E-mail : shakeel.naqshbandi@yahoo.com